# திரிசிரபுரம்
# மகாவித்வான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை
# நூற்றாண்டு விழா

★ திருச்சிராப்பள்ளித் தமிழ்ச் சங்கத்தில்

★ 1976 மார்ச்சு 3, 4, 5, 6, 7 நாட்களில்

★ பிள்ளையவர்களின்

★ நூற்றாண்டு விழாவில்

★ புலவர் பெருமக்கள் செய்த அஞ்சலி



அன்பளிப்பு :

திருச்சிராப்பள்ளித் தமிழ்ச் சங்கம்

மேலரண்சாலை

திருச்சிராப்பள்ளி - 620 008.

உ

திருச்சிராப்பள்ளித் தமிழ்ச் சங்கத்தில்

1976-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 3, 4, 5, 6, 7 தேதிகளில்

திரிசிரபுரம்

# மகாவித்துவான் மீனுட்சிசுந்தரம் பிள்ளை அவர்களின்

நூற்றுண்டு விழாவில்

# புலவர் பெருமக்கள் செய்த அஞ்சலி

திருமுறைக்கலைஞர்
வித்துவான் தி. பட்டுச்சாமி ஓதுவார்
20, கீழவீதி,
மலைக்கோட்டை, திருச்சி-2.

சீராரும் துறைசை மகாவித்வச் சீராளா!
பேராரும் மீனுட்சி சுந்தரப் பாவலா!
பொன்போலும் நின்சீர் மனத்திலே உன்னிநான்
நின்னடி யேவாழ்த்து வேன்.

புலவர் த. கி. குப்புசாமி ஆழ்வார்
C-89, 10-A, வடமேற்கு விரிவு,
தில்லைநகர், திருச்சி-18.

இக்காலக் கம்பன் எழில்மிகுமா வித்துவான்
தக்கோர் பரவத் தமிழ்வளர்த்தோன் – எக்காலும்
தேனூர் தமிழ்மலரால் செப்பற் குறுபுகழோன்
மீனுட்சி சுந்தரனும் வேள்.

பேராசிரியர் ரம்போலா மாஸ்கரேனஸ், M.A.
1, பிரிட்டோ காலனி,
திருச்சி-2.

நன்னூல்கள் ஓதுதலும் நாற்பயன்கள் நாடுதலும்
பன்னூல்கள் போற்றிப் பயிற்றுதலும் – எந்நாளும்
மெய்த்தவமாய் மேற்கொண்ட மீனுட்சி சுந்தரனுர்
பைத்தமலர்ச் சேவடிக்கென் பா.



கலைவாணன் அப்புலிங்கம் — சேக்கிழார் இல்லம்,
திருவானைக்கோயில், திருச்சி-5.

தொட்டவிட மெல்லாம் சுவையூறக் கற்பனைத்தேன்
சொட்டவிட வல்ல சுடர்க்கவிக்கோன் – கட்டறுக்கும்
மந்திரமாச் செஞ்சொல் வளங்குலவு மீனாட்சி
சுந்தரமால் செந்தமிழ்க்கோர் சொத்து.

அயிலை தமிழ்ச்செழியன் — அலுவலர், அமராவதி அங்காடி,
திருச்சி-2.

தண்ணார்ந்த பாட்டைத் தலந்தோறும் பாடியதில்
விண்ணார்ந்த பேர்பெற்ற வேளாளன் – கண்ணான
மீனாட்சி சுந்தரனை மேருமலை ஒத்தவனை
வானாட்சி பெற்றவனை வாழ்த்து.

புலவர் க. கோபண்ணன் — 64, நடுத்தெரு,
வரகனேரி, திருச்சி-8.

செந்தமிழாம் அன்னையினைச் சிம்மா சனமேற்றி
முந்திக் கவிவளர்த்த மீனாட்சி – சுந்தரனார்
பாத மலருக்கிப் பாமலரைச் சூட்டுகின்றேன்
நாதன் திருவடியென் நா.

புலவர் சி. சிவக்கொழுந்து — 137, பெரியகம்மாளத்தெரு,
திருச்சி-8.

கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்எனும் – நற்குறட்குக்
காவியமாய் காட்சிதரும் மீனாட்சி சுந்தரமே!
ஓவியமாய் நெஞ்சில் ஒளிர்.

சா. பெரியசாமி — அமைச்சர், தமிழ்ச்சங்கம்,
திருச்சி-8.

பாட்டால் எழுத்தால் பழகவரும் நற்பண்பால்
நாட்டைக் கவர்ச்சித்த நாயகனும் – வாட்டமிலா
மேதையர்க்கு மேதையெனும் மீனாட்சி சுந்தரனின்
பாதையினைப் பற்றுகவிப் பார்.

புலவர் வி. அ. பரிமேலழகர் — புனிதவளனார் கல்லூரி உயர்பள்ளி,
திருச்சி-2.

மீனாட்சி சுந்தரனின் மெய்ப்பனுவல் மண்ணுலகில்
கோனாட்சி செய்தனவே கோமானே – வானோர்க்குச்
செந்தமிழ்ப் பாவின் திறமுரைக்கச் சென்றனையோ
எந்தையே வாழ்கநின் பா.

புலவர் ப. அரங்கசாமி — 12, புதுத்தெரு,
இலால்குடி.

தெய்வத் தமிழாய்ந்து தேர்ந்த புலமார்ந்து
சைவ நெறிதோய்ந்த சான்றோயே! – மெய்விதிர்க்கும்
பாக்கள் படைத்தநின் பாதம் தலையேற்றுப்
பூக்கள் படைத்தேன் புகழ்ந்து.

S. இராமச்சந்திரன், பி. ஓ. எல். — 94, நங்கவரம் ஸ்டோர்,
திருச்சி-2.

கல்விக் கடலாய் கலைபயில் நல்லோரின்
நல்லா சிரியனாய் நானிலத்தில் – நல்லோய்,நீ
எல்லாப் பரிசுடனே சுந்தரப்பேர் தாங்கிமிகு
வல்லோனாய் வாழ்ந்தாய் நனி.

சண்முக. தாயுமானவன் — 87, மலையடிவாரம், பொன்மலை,
திருச்சி-1.

வான்புகழ் சாமிநாத வள்ளலுக்கு ஞானகுரு!
ஆன மகாவித்வ ஆசானை – நானிலத்தில்
பக்தி நெறிவளர்த்துப் பைந்தமிழைக் காத்தவனை
நெக்குருகி வாழ்த்துமென் நெஞ்சு.

புலவர் பி. திருஞானசம்பந்தம் — மருதூர்,
(சமயபுரம் வழி) திருச்சி.

மலரே! மலரே! மகிழ்வதேன் இன்றே?
மலராய்ப் பிறந்தாய் மணமும் – கலந்தே
சிரபுரம் மீனாட்சி சுந்தரன் தாளைநீ
பொருந்தலால் கொண்டனையோ பேறு?

புலவர் செ. தமிழரசன் சமுத்திரம்,
மணப்பாறை, திருச்சி மாவட்டம்.

அன்னை தமிழை அரியணையில் நின்றொளிர
தன்னை ஈந்த தவப்புலவ! – இந்நாளில்
பூமாலை சார்த்தி புகழாம் தமிழ்விரித்துப்
பாமாலை செய்தோம் பணிந்து.

புலவர் ம. கா. வேங்கடராமன், M. A. திருவையாறு,
தஞ்சை மாவட்டம்.

சிந்தைக் கினியதமிழ் காத்தலால்; சீரியநல்
வந்தனைக் கேய்ந்தபெருந் தன்மையால்; வானோங்கு
செங்குன் றெனவாழ் சிறப்பால்; திருச்சிதமிழ்ச்
சங்கமும் சுந்தரனும் நேர்.

புலவர் க. தில்லைகோவிந்தன் ஸ்ரீ விவேகானந்த வித்யாவனம்,
உயர்நிலைப்பள்ளி, திருப்பராய்த்துறை.

பூந்தமிழ்த்தாய் பிள்ளையெனப் போற்றும் பெரும்புலவ!
தீந்தமிழர் வாழ்வாய்த் திகழ்மணியே! – மாந்தரெலாம்
பாட்டும் உரைநயமும் பாவல! நின் வாய்மணக்கக்
கேட்டுயர்வு பெற்றார் கிளர்ந்து.

புலவர் மு. சொக்கப்பன் ஸ்ரீ விவேகானந்த வித்யாவனம்,
உயர்நிலைப்பள்ளி, திருப்பராய்த்துறை.

மீனாட்சி சுந்தரப்பேர் மேவித் தமிழுலகில்
கோனாட்சி செய்ததமிழ்க் கோவென்கோ? – வானாட்சி
காணப் புறப்படுமுன் கன்னித் தமிழரசி
மாணவணி பூண்டாள் மகிழ்ந்து.

புலவர் செ. இளங்கோவன் ஸ்ரீ விவேகானந்த வித்யாவனம்,
உயர்நிலைப்பள்ளி, திருப்பராய்த்துறை.

தொன்மை அழகினிமை தோயும் தமிழொப்பாய்
மென்மை மலருளங்கொள் மேலோனே! – நன்மைதரு
தேன்தமிழ்ப் பாவால் திகழும் பலநூல்கள்
வான்மழைபோல் தந்தனையால் வந்து.

திரு. ம. வீரப்பிள்ளை — சன்மார்க்க சங்கத் தலைவர், ஏகிரிமங்கலம்.

சைவ நெறிசேர் தமிழ்த்தழைக்குஞ் சான்றோய்
தெய்வ நெறிதிகழும் சீராளா! – சைவநெறி
மீனாட்சி சுந்தரவுன் மென்மலர்ப்பா தத்திலென்பா
தானாட்சி பெற்றிடுமோ சாற்று.

புலவர் ப. வே. திருமாவளவன் — அரசினர் உயர்பள்ளி, கீரனூர்.

சீரார் சிரபுரத்துச் செம்மலிவர்; இப்புவியில்
பேரார்ந்த மீனாட்சி சுந்தரனார் – நேராரும்
போற்றும் நெறியாளர் நீண்டதமிழ்ச் சான்றோரை
ஏற்றுவோம் என்றும் இனிது.

பேராசிரியர் மு. சி. கேசவன், எம். ஏ. — உருமு தனலக்குமி கல்லூரி, திருச்சி-19.

உள்ளத்தைக் கொள்ளைகொளும் நன்னூல் பலபடைத்த
பிள்ளையவர் காள்! பெற்ற பிள்ளைகளுள் – பிள்ளையெனத்
தெள்ளுதமிழ் நூல்பதித்த சாமிநா தையரைப்போல்
பிள்ளையெவர் உற்றார் இவண்.

புலவர் அ. திரவியம் — புனித சூசையப்பர் கல்லூரி உயர்பள்ளி, திருச்சி-2.

சிந்தை யிருள்பருகிச் சேர்ந்தொளிரு மீனாட்சி
சுந்தரமாஞ் செய்ய சுடரிணையாம் – வந்தித்துப்
பாமா மலர்சூடிப் பாடுவோம் பல்லாண்டு
கோமானின் கோலக் கவிக்கு.

புலவர் க. ஆறுமுகம், எம். ஏ. — புனித வளனார் கல்லூரி உயர்பள்ளி, திருச்சி-2.

கவினூறும் காப்பியம் ஓர்இருபான் எட்டும்
புவிபோற்றும் நல்பிரபந் தம்எம் – செவியாரச்
சந்தமுடன் இன்றமிழில் நின்னைப்போல் மீனாட்சி
சுந்தர! தந்ததெவர் கூறு?

புலவர் ப. முருகேசன் — பூவாளூர், லால்குடி.

தாழ்ந்த சடையும் தவளத் திருநீறும்
சூழ்ந்த புலியதளும் சூழ்அரவும் சேர்ந்தோனைப்
பூசித்த புண்ணியர் மீனாட்சி சுந்தரரை
நேசிப்பார் வாழி நெடிது.

தமிழ்நாவலர் சி. அரசப்பனார் — தாயகம், உறையூர், திருச்சி-3.

கவிதைக் கடலே! கனிச்சுவையே! கண்டே!
புவிக்குள் உருவாம் புகழ்க்குன்றே! நன்மை
செவிக்குத் தருவாய் புலன்ஒன்றக் கவிதை
குவிக்கும் அருவியே வாழ்!

புலவர் ந. வாசுதேவ கிருட்டிணமூர்த்தி — அரசு சையது முர்துசா உயர்பள்ளி, திருச்சி-8.

தோன்றிற் புகழொடு தோன்றுக என்றுரைத்த
சான்றோன் மொழிவழி நின்றவனே – தேன்நிகர்
காவியம் ஈந்தவனே! மீனாட்சி சுந்தர!
தூவினேன் பூவிணைநின் தாள்.

புலவர் பா. நாராயணசாமி, பி.ஏ. — திருச்சி-20.

கன்னித் தமிழால் கடவுள் நெறியனைத்தும்
பொன்னி நதிபோல் பொலிவுறவே – மன்னுலகில்
தொண்டுசெய்த மன்னவனும் தூயதமிழ்ச் சுந்தரனை
வண்டமிழால் வாழ்த்துவோம் வா.

புலவர் இரா. வரதராசன், பி.ஏ. — திருவானைக்கா, திருச்சி-5.

முன்னைப் பழநூல்கள் எல்லாமே கற்றதுடன்
பின்னைப் புதுநூல்கள் சொன்னவரே! – அன்னைத்
தமிழ்மொழியின் மூத்த தலைமகனே! உம்மை
அமிழ்தெனவே போற்றிடுமே பார்.

புலவர் சு. இராமசாமி — 51, திருவள்ளுவர்தெரு, திருவரங்கம், திருச்சி-6.

வண்ணத் தமிழெனும் வாடா மலராலே
பண்ணெழுகு பாமாலை பாடியே – மண்ணவர்
எண்ணில் நிலைபெற்ருய் மீனுட்சி சுந்தர !
மண்ணுலகில் நின்நாமம் வாழ்.

புலவர் இலக்குமிபாலன் — பாளையம், திருச்சி மாவட்டம்.

பைந்தமிழே மூச்சாய் பனிமலையின் பேரொளியாய்
அந்தமிலாத் தொண்டதனின் ஆற்றலாய் – செந்தமிழின்
கோனுட்சிக் கோமகனுய் நெஞ்சமதில் வாழ்கின்ற
மீனுட்சி சுந்தரத்தை வாழ்த்து.

புலவர் சு. பாலசுப்ரமணியன் — அரசு உயர்பள்ளி, பெரம்பலூர்.

கன்னல் புலமையால் காவியப் பாவினுல்
தென்னர் புகழெனும் தொண்டினுல் – அன்பினுல்
முத்துத் தமிழ்த் தொண்டர் மீனுட்சி சுந்தரரை
நித்தமும் வாழ்த்துவம் யாம்.

புலவர் C. அருண்மொழி — மேலப்பழுவூர், திருச்சி.

செந்தமிழின் நூற்புலமை சீர்சான்ற நற்குணத்தின்
பைந்தமிழ்த்தாய் ஈன்றெடுத்த பண்புமகன் – சொந்தமுடன்
வீசுமொளி ஆதவனும் மீனுட்சி சுந்தரரின்
பேசுமொழி எல்லாமே பாட்டு.

புலவர் துரை. இராசேந்திரன் — உறையூர், திருச்சி-3.

செந்தேன் வழங்கிடும் செம்மலர்போல் இன்றமிழை
விந்தையுடன் ஈந்ததனுல் மீனுட்சி – சுந்தரரே !
ஈடில்லா மாண்பதனை இந்நாடு பெற்றதுவே
பாடித் துதிப்பேன் பணிந்து.

சொ. நமசிவாயம், M.A., B.T.

உருமு தனலக்குமி கல்லூரி,
திருச்சி-19.

தேனுட்சி செய்திருக்கும் தீங்கவிதை ஆயிரஞ்செய்
மீனுட்சி சுந்தரர்க்கே வானுட்சி – மேதினியில்
ஒண்டமிழுக் கோர்பாகம் தந்தவனின் றன்புகழை
விண்டவரை நாளுமற வோம்.

புலவர் சி. செயராணி

பூவாளூர்,
லால்குடி.

செந்தமிழ்த்தாய் ஈன்றெடுத்த சேயான மீனுட்சி
சுந்தரரே! வாகைதனைச் சூடியே – நந்தமிழர்
நீடியே வாழ்ந்திட நீள்நிலத்தில் செய்திட்டாய்
பாடிப் புகழ்வேன் பணிந்து.

இரா. கோபாலசாமி

அருள்சோதி அச்சகம்,
பெரம்பலூர்.

தமிழுக்கோர் தாத்தாவைத் தந்ததமிழ்ச் சான்ருேன்
அமிழ்தாம் தமிழ்வளர்த்த ஆசான் – குமிலாய
குன்றத்தே சீருடைய மீனுட்சி சுந்தரனுர்
மன்றுபுகழ் ஈந்திட்ட மாண்பு.

கவிஞர் ப. திருவேங்கடம்

F. 80/5, இரயில்வே காலனி,
பொன்மலை, திருச்சி-4.

ஆழ்ந்தவறி வாற்றலும் ஆசு கவித்திறமும்
சூழ்ந்த பெரும்புலமைத் தோன்றலாய் – வாழ்ந்திங்கு
நூருண்டும் ஒடியதே நுண்மாண் நுழைபுலத்தில்
யாரவர்க்கு நேரின் றியம்பு?

வீ. பஞ்சவர்ணம்

திருவானைக்கா,
திருச்சி-5.

செந்தமிழின் நூற்புலமைச் சீடர்தம் ஞானகுரு
செந்தமிழ்த்தாய் பெற்றெடுத்த செல்லமகன் – சிந்தனையில்
மின்னும் அறிவொளியாம் மீனுட்சி சுந்தரரின்
பொன்னடிக் கென்கவிதைப் பூ.

சைதை. சுந்தரமூர்த்தி, M. A., B. T.

F.79/4, இரயில்வே காலனி,
பொன்மலை, திருச்சி-4.

நற்கரும்பின் சாற்றினில் நாவினிக்குஞ் செங்கனிகள்
பற்பலவாய் இட்டுப் படைத்தாலும் – சொற்சுவைசேர்
மீனாட்சி சுந்தரத்தின் மேலான பாடல்கள்
தேனாய் இனிக்கும் தெளிந்து.

செ. தம்புரான்

93, பிள்ளையார்கோவில் தெரு,
வரகனேரி, திருச்சி-8.

வண்ணத் தமிழும் வளரும் சமயமும்
திண்ணமுடன் காத்த செழுஞ்சுடரே – எண்ணமெனும்
தாமரையில் வந்திருந்து தா,மறையை எந்தனுக்கு
நாமணக்கப் பாடுகின்றேன் நான்.

திரு. ப. முக்கப்பிள்ளை

தலைவர், மாவட்ட அருள்நெறித் திருக்கூட்டம்,
நடுத்தெரு, வரகனேரி.

சித்தாந்தத் தேனைத் தெளிவாக்க நூல்படைத்து
வித்தகத்தைக் கொண்டதமிழ் வேந்தனே! – நித்தம்
சமயம் வளர்த்துத் தமிழ்காத்த மேன்மைக்(கு)
இமயமும் ஆகுமோ ஈடு.

மாமுனிதாசன்

புனித சூசையப்பர் உயர்பள்ளி,
திருச்சி-2.

கல்விக் கரைகண்டோன்! கம்பன் நிகர்புலவன்
வெல்லற் கருஞ்சொல்லன்! விஞ்சுபுகழ் – நல்லாசான்
மீனாட்சி சுந்தரன் மின்னார் தமிழ்வானின்
மீனாட்சி சுந்திரனும் மெய்.

ம. இராமசாமி

அரசினர் உயர்பள்ளி,
பெரம்பலூர்.

கல்லானைக் கற்பிக்கும் நல்லானை நாவூறும்
சொல்லானை மீனாட்சி சுந்தரனை – பல்கலைதேர்
வல்லானை வார்த்தெடுத்த மெய்யானை தாய்மொழிக்கா
எல்லாமும் செய்வானை எத்து.

ப. சக்திவேலன் கொட்டப்பட்டு, திருச்சி-4.

கன்றின்வாய் பால்வழியும் கானகத்துப் பூச்சுவைக்கும்
வண்டின்வாய் தேன்வழியும் வார்குழலே! – குன்றில்
பொழிந்துவரும் நீர்போலப் பூந்தமிழின் பாத்தேன்
வழிந்துவரும் வாய்பிள்ளை வாய்.

திரு. ப. ஆறுமுகம், எம். ஏ: தூய சூசையப்பர் கல்லூரி, திருச்சி-2.

ஆரா அமுதம் அனைய தமிழ்வளர்த்த
பேரா சிரியர் பெருமானைச் – சீராரும்
தேனூட்சி செய்மொழிசேர் மீனாட்சி சுந்தரனை
நீநாளும் நெஞ்சே நினை.

புலவர் இசிதோர் சாந்தி புனிதச் சிலுவை உயர்பள்ளி, திருச்சி-2.

புண்ணியநாள் யாமெல்லாம் போற்றுநாள் செந்தமிழ்த்தாய்
எண்ணியெதிர் பார்க்கும் இனியநாள் – மண்ணுலகில்
மேவுமுயர் மீனாட்சி சுந்தரவேள் என்னும்
நாவலர்கோன் தோன்றியநல் நாள்.

இரா. கிருஷ்ணசாமி ரெட்டியார் தலைவர், தமிழ்ச்சங்கம், திருச்சி-8.

மகாவித்வான் மீனாட்சி சுந்தரனார் வாழ்க
மாமேதை தந்தகவி சந்ததமும் வாழ்க
பாட்டாலும் உரையாலும் நூற்றாண்டு விழாவில்
பணிசெய்த பண்பாளர் பல்லாண்டு வாழ்க.

# திருச்சிராப்பள்ளித் தமிழ்ச் சங்கம்

பதிவு எண் : S. 24/56

மேலரண்சாலை–திருச்சிராப்பள்ளி-620 008.

## ஆட்சிக் குழு

---




ஸ்ரீ ஷண்முகா பிரஸ், திருச்சி-8. போன்: 5064